# நகரக்கோயில் ஒன்பது திருப்பதிகம்


இளையாற்றங்குடி


மாற்றூர்


நேமங் கோயில்


இரணியூர்


பிள்ளையார்பட்டி


இலுப்பைக்குடி


சூரைக்குடி


வைரவன் கோயில்


வேலங்குடி




கவிஞர் சித. சிதம்பரம்

# நகரக் கோயில் ஒன்பது திருப்பதிகம்

கவிஞர் சித.சிதம்பரம்




மணிவாசகர் பதிப்பகம்
31, சிங்கர் தெரு, பாரிமுனை,
சென்னை-600108.

முதல் பதிப்பு : 2003
திருவள்ளுவர் ஆண்டு : 2034
உரிமை : ஆசிரியருக்கு

**விலை : ரூ. 9.00**

மணிவாசகர் வெளியீட்டுஎண்: 995

பதிப்பாசிரியர்

**முனைவர் ச. மெய்யப்பன்**

ச. மெய்யப்பன், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் முன்னாள் தமிழ்ப் பேராசிரியர்.

தமிழகப் புலவர்குழுவின் துணைத் தலைவர்.

பல்கலைக்கழகங்கள் பலவற்றில் அறக்கட்டளைகள் நிறுவியுள்ளார்.

'வள்ளுவம்' இதழின் சிறப்பாசிரியர்.

குன்றக்குடி அடிகளார் 'தமிழவேள்' என்றும், தருமபுரம் ஆதீனத் தலைவர் 'செந்தமிழ்க் காவலர்' என்றும் விருதுகள் வழங்கிச் சிறப்பித்துள்ளனர்.

'பதிப்புச்செம்மல்' என அறிஞர்கள் இவரைப் பாராட்டுவர்.

*கிடைக்குமிடம் :*

**மணிவாசகர் நூலகம்**

12-B, மேல சன்னதி, சிதம்பரம்- 608001. ✆:230069
31, சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை-600108. ✆:25361039
5, சிங்காரவேலுதெரு, தி. நகர், சென்னை-600017. ✆:24357832
110, வடக்கு ஆவணி மூல வீதி, மதுரை-625001. ✆:2622853
15, ராஜ் வீதி, கோயமுத்தூர்-641001. ✆:2397155
28, நந்தி கோயில் தெரு, திருச்சி-620002. ✆:2706450

அச்சிட்டோர் : மணிவாசகர் ஆப்செட் பிரிண்டர்ஸ், சென்னை - 600 021.
தொலைபேசி : 25954528



# நகரக்கோயில் ஒன்பது திருப்பதிகங்கள்

பதிப்புச்செம்மல் ச. மெய்யப்பன்

மணிவாசகர் பதிப்பகம் 'நகரத்தார் கலைக்களஞ்சியம்', 'நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு' ஒன்பது நகரக் கோயில் பற்றித் தனித்தனி நூல்கள் ஆகியவற்றை வெளியிட்டு சமூக வரலாற்றைப் பதிவு செய்துள்ளது. ஒன்பது கோயில்கள் பற்றி உரைநடையில் எத்தனை நூல்கள் இருந்தாலும், கவிதையில் ஒருநூல் வெளிவருவது சாலச் சிறப்புடையதாகும். ஏனெனில், காலத்தை வென்று நிற்கும் தனிச்சிறப்புடையவை கவிதைகள்.

நகரத்தார் சமூகம் கோயில் சார்ந்து வாழும் குடிகளை உடைய சமூகம். அவர்களது சுவீகாரம், திருமணம் முதலிய சமூக உறவுகள் ஒன்பது கோயிலை அடிப்படையாக வைத்தே நடைபெறுகின்றன. நகரத்தார் திருமணம் ஒவ்வொன்றும் அவரவர் கோயிலில் பாக்கு வைத்துப் பதிவு செய்யப்படுகிறது. கோயில் மாலை வருவது தான் திருமணத்திற்குரிய சமூக அங்கீகாரம் ஆகும்.

நகரக் கோயில்கள் ஒன்பதிலும் அக்கோயில் சார்ந்த புள்ளிகள் ஊர்வாரியாக எத்தனைபேர், யார் யார் என்பது குறித்த விவரங்கள் பதிவேடுகளில் உள்ளன. இப்போது, ஒன்பது கோயில்களிலும் குடமுழுக்கு விழாக்கள் அடுத்தடுத்து நடைபெற்று வருகின்றன. வழிபடும் அன்பர் கூட்டம் பெருகி வருகிறது.

நகரக்கோயில் ஒன்பதையும் ஒரே மூச்சில் பார்த்து வழிபடும் வழக்கம் அண்மைக் காலத்தில் பெருவழக்காக உள்ளது.

ஒன்பது கோயில்களைப் பற்றிய இந்நூலின் ஆசிரியர், சித. சிதம்பரம் சிறந்த கவிஞர் புதுக் கவிதையில் இரண்டு நூல்களைப் படைத்திருப்பவர். கற்பனை வளமும், சொல்லாட்சியும் இவரது கவிதைகளின் தனிச்சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன.

சங்ககால மரபை இன்று வரை பேணிக் காக்கும் நனிநாகரிகமுடைய நகரத்தார் சமூகத்தின் மரபுவழிப் பெருமைகளையும், இயல்புகளையும் கவிஞர் உள்வாங்கிக் கொண்டு எளிய தமிழில், படிப்போர் மனத்தில் பதியும் வண்ணம் பாடியுள்ளார். இவர் கவித்துவம் பாடல் தோறும் பளிச்சிடுகிறது. நீண்ட பாரம்பரியப் பெருமை உள்ள சமூகத்தின் களங்களாகிய ஒன்பது கோயில்களைப் பற்றி முதன்முதலில் மரபுக் கவிதையில் பாடிய சிறப்பினை நம் கவிஞர் பெறுகிறார்.

**"பலசொல்லக் காமுறுவர் மன்ற மாசற்ற**
**சில சொல்லல் தேற்றாதவர்"**

என்பார் வள்ளுவர்.

அளப்பரிய பெருமையுடைய நகரத்தார் சமூகத்தின் வாழ்வு மையங்களாகிய கோயில்களைப் பற்றிச் சில பாடல்களில் சிறப்பாகப் பாடிய சிதம்பரம் சிறந்து விளங்க வாழ்த்துகிறோம். ஒளிமயமான எதிர்காலம் இவருக்கு அடைய ஒன்பது நகரக் கோயில்களின் தெய்வங்களும் அருள்பாலிக்க வேண்டுமென்று பிரார்த்திக்கிறோம்.

உ

அர. சிங்காரவடிவேலன் (எ) அரசி
மீனாட்சி அரங்கம்
106, வ.உ.சி. தெரு,
கண்டனூர் - 630 104 ☎ 282360

# சாற்றுகவி

வானார்ந்த வளமனையில் பிறந்த தம்பி
வயிறார அன்னமிட்டு மகிழ்ந்த பெற்றோர்
ஊனார்ந்த திருவயிற்றில் பூத்த முல்லை;
உயிரார்ந்த செந்தமிழை மிழற்றும் கிள்ளை
தேனார்ந்த செந்தமிழால் சிவனாம் ஞானச்
செம்பொருளைத் தேவாரப் பதிகம் போல
நாணாளும் இறைவணங்கும் பாட லாக
நமக்களித்தான் சிதம்பரமாம் நம்பி வாழ்க!

அவற்பெற்ற நகரத்தார் இனத்தார் எல்லாம்
"ஆண்டவனால் வரத்தாலே பெற்றோம்" என்றும்
"தவப்பயனால் தமிழ்பாடப் பெற்றான்" என்றும்
தலைநிமிர்ந்தும் மனமகிழ்ந்தும் சாற்றும் வண்ணம்
சிவபெருமான் தந்தவனே! சிதம்பர த்தின்
திருப்பெயரின் உட்பொருளே! ஞானக் கன்றே!
நவமணியாய்த் திருக்கோயில் பதிகம் தந்தாய்
நமதுபழம் திருமுறையாய்ப் பதிகம் வாழ்க!

விதம்பலவாம் பாவகையில் தேர்ச்சி பெற்றாய்
விளையாட்டாய்த் தலையாட்டும் வகையில் பாடும்
பதம்தேர்ந்தாய்; பளிங்கைப்போல் தூய நெஞ்சம்
பழமாகும்; உன்பாடல்; மருந்து மாகும்;
சதம்போடும் விளையாட்டு வீரன் போலத்
தமிழ்பாடும் பூங்குயிலே! தாயு மானார்
பதம்போல உன்பாடல் சொற்க ளெல்லாம்
பாரான கவியரசி வாழ்த்து வேனே!

அன்பன்,
அர. சிங்காரவடிவேலன்

# அணிந்துரை

நகரத்தார்கள் தங்கள் இனத்திற்கு - உறவு வலுப்பெறவும், குலம்பெருகவும், மரபுகள் காக்கப்படவும், தொன்று தொட்டுக் கடைபிடித்து வரும் வழக்கங்கள் தொடரவும்,- பாண்டிய நாட்டில் குடியேறிய சில காலங்களுக்குள், சில ஒழுங்குமுறைகளையும், கட்டுப்பாடுகளையும், தமக்குள் அமைத்துக்கொண்டனர்.

நாட்டுக்கோட்டைச் செட்டியார்களாகிய நகரத்தார்- நாட்டால் இந்தியர், இனத்தால் திராவிடர், மொழியால் தமிழர், மதத்தால் இந்துக்கள், சமயத்தால் சைவர்கள்.

நகரத்தார் வாழ்வில் நாளும் நல்லருள் பாலித்துவரும் இறைவனையும்- இறைவியையும் (அவர்கள் மூர்த்தி நாமம் நூலில் காணலாம்) அவர்கள் எழுந்தருளியுள்ள ஒன்பது நகரக்கோவில்களையும் கூறும் இந்த நூல் இதுவரை எந்த ஆசிரியரும் சொல்லாத கருத்துக்களை, தொடாத பகுதிகளைக் கூறும் செந்தமிழ்ப் பதிகமாக- பைந்தமிழ் இலக்கியமாக- பல்செய்திக் களஞ்சியமாக விளங்குகிறது.

நூல் ஆசிரியர்- கவிஞர் சித. சிதம்பரம் அவர்கள் காரைக்குடி, முத்துபட்டிணத்தில் பிறந்தவர்; ஒன்பது கோவில்களில் மாத்தூர்கோவில் பிரிவு நகரத்தார் ஆவார். பட்டம் பெற்றவர்; படித்தவற்றைப் பகுந்துரைக்கும் பண்பட்ட எழுத்தாளர்; சிந்தனையாளர்; நற்குண நற்செய்தியாளர்; சிறுவயதுமுதல் கன்னித்தமிழில் கவிதைகள் புனைந்து வருபவர். புதுக்கவிதையில் பல புதுமைகளைச் செய்தவர். மரபுக்கவிதைகளில் இப் பதிகப் பாடல்கள் மூலம் தனக்கொரு சிறப்பான இடத்தைத் தேடிக்கொண்டவர்.

"அட்சரம் லெட்சம் பெறும்" என்பர் வடநூலர் இவர் பாடல்களில் வார்த்தைகள் பல வராகன்கள் (நகரத்தார்களுக்கு பழக்கப்பட்ட பொன் நாணயம்) பெறும்

என்றால் மிகை உரை அல்ல.

"வாணியைச் சரண்புகுந்தேன் - அருள் - வாக்களிப்பாள் என திடம் மிகுந்தேன்" என்று கூறி மகாகவி பாரதி - தனது 'பாஞ்சாலி சபதம்' நூலைத் தொடங்குவான். இங்கும் கவிஞர் சிதம்பரம் தான் துதிக்க தன் சந்ததிக்கும் - தன் துதிக்கையை - முன்பளித்து காக்கின்ற பிள்ளையார்பட்டி கற்பகவினாயகரைச் சரணடைகிறார். "அன்றும், இன்றும், என்றும், உன்றன் பாதமே அடைக்கலம்" "நான் வெற்றி கொள்ள வேண்டும்" என்று கூறித் தொடங்குகிறார். இக்கோவில் பதிகத்தை ஆதி முதல் அந்தம் வரை அத்தனை வரிகளையும் படிப்பவர்- தேவார - திருவாசகப் பாடல்களைக் கற்ற பயனை அடைவர்; நிறைவையும் பெறுவர். அத்துணை அளவு மூவரின் தேவாரப்பாடல்களிலும், மணிவாசகரின் திருவாசகப் பாடல்களிலும் நிறைந்துள்ள கருத்துக்கள், செய்திகள், வார்த்தைகள், வரலாறுகள் மற்றும் சிவத்தலங்களைப் பற்றிய குறிப்புகள், அதில் அமர்ந்துள்ள மூர்த்தி நாமங்கள் முதலியன இப்பதிக்கத்தில் பரந்து கிடக்கின்றன. விரித்துச் சொல்லப்பட்டுள்ளன!

கவிஞர் பதிகத்தை- கலிப்பா, விருத்தம், தாழிசை, தாண்டகம், சந்தம் எனும் எல்லாவகை யாப்புகளிலும் பாடியுள்ளார். மேலும் தேவாரப் பண்ணிசைகளிலும் முயற்சித்துள்ளார். அதில் வெற்றியும் கண்டுள்ளார். சொல்லாட்சி, நடைஅழகு, ஓசைநயம், அளவொத்தசீர்கள், இலக்கணக்கோப்பு, கருத்துச்செறிவு என அனைத்துக் காப்பிய நலங்களுடனும் - நூல் அமைந்துள்ளது இதன் மற்றொரு சிறப்பாகும்.

இக் கவிஞர் தான் எடுத்துக்கொண்ட முயற்சியைத் தெளிவாகச் செய்திருக்கிறார். எடுத்துக்காட்டாக இங்கு சிலவற்றை மட்டும் கூறுகிறேன். நகரத்தார் சோழன் நகர் - புகார் விடுத்து- தொன்மை மிகு பாண்டியன் நாட்டில் குடிஅமைத்துக் கொண்ட வரலாற்றை சிறிதே கோடிட்டுக்காட்டுகிறார். "சோழன் தேசமும் ஆழியின் ஓரமும் துயர் தந்ததாலே ஏழகப்பெருந்திருவான"

இளையாற்றன் குடி வந்தார் என்றும், "வளையாத அறம் மாறி கண்ணகிக்கு, வழங்கியதோர் கொடுமை - தீர் செழியன் பின்னோர் களைத்திருந்த கண்ணகியின் மரபினோர்க்கு, கட்டிவைத்த இளைய ஆதன்குடியென்ற ஊரைச்சேர்ந்த ஏழான பிரிவினர்கள், ஒன்பான் ஆயினர்" என்கிறார்.

எந் நாட்டவர்க்கும் இறைவன் ஆன தென்னாட்டுச் சிவனைக் குறிப்பிடுகையில், "கிழவியின் புட்டுக்கு உழைப்பைத் தந்தவன் கீர்த்திமிகு அகத்தியர்க்கு அழைப்பை தந்தவன்" என்றும், "காலனை உதைத்தழித்துக் கண்டனுக்கு (மார்க்கண்டனுக்கு) வாழ்வு அளித்தவன்" என்றும், "காரைக்கால் அம்மை முன்பு- ஏவலாய் நடனன்போல் விளங்கும் ஏதிலார் தலைவன்" என்றும், அப்பர், சுந்தரர், சம்பந்தர், மணிவாசகர் மற்றுமுள்ள அறுபத்து மூன்று நாயன்மார்களை ஆட்கொண்டு அருள்பாலித்தது எனப் பலவாறு விளக்கி நிரந்தரம் உலகினில் சிவன் தரும் அருளென உறுதி கூறுகிறார்.

மனித வாழ்க்கையில் - நாளும் (நட்சத்திரங்கள்) கோளும் (நவக்கிரங்கள்) நல்லதைக் கெடுத்து அல்லதைக் கொடுத்துவருவதாக நம்பப்படுகிறது இதை அகற்றவே அருணகிரியாரும் நாளென் செயும் வினைதான் என்செயும் நாடிவந்த குமரேசனை நம்புங்கள் அவன் துணை நமக்குண்டு - என்றார் பார்வதியின் ஞானப்பால் அருந்திய சம்பந்தர், பைந்தமிழ் கோளறு பதிகம் பாடியதும் குவலயத்தார்க்கு சிவசிந்தனையைக் கூட்டத்தான் நமது கவிஞரும் குரு,செவ்வாய் புதன் வெள்ளி சனி பாம்பு கதிர்மதியம் திருவினையே தருமாறு திகழ்பவன் மாத்தூர் ஐந்நூற்றீஸ்வரன் என்றும் இருபத்தேழு நட்சத்திரங்களும் ஒன்பது கிரகங்களும் பன்னிரண்டு ராசிகளும் தருகின்ற கேடுகள், இளையாற்றன்குடி வந்தால் நீங்கும் என்றும், நவகோள்களில் குருவுக்குத்தான் தனம், புத்திரர்களைத் தரும் அதிகாரம் உண்டு; எனவே வேலன்குடிப் பதிகத்தில் அக்கோவில் புள்ளிகள் பெருக (கூட) "மாமாட்சி வேலங்குடி மல்குக குருவின் பார்வை" என்றும் பாடுகிறார்.

நாலாயிரத் திவ்வியப் பிர்ப்ந்தத்தில் 'போற்றி' என்று புருஷோத்தமனைப் போற்றுவதை கோதை நாச்சியார் பாடல் ஒன்றில்தான் ஓங்கி உலகளந்த உத்தமனை - "அன்றிவ் உலகம் அளந்தாய் அடி போற்றி" என்பாள் பெரியாழ்வார் திருமகள், ஆண்டாள் மட்டுமல்ல அனைத்து ஆழ்வார்களும் - அச்சுதனின் திருவிக்ரம அவதாரத்தையே சிறப்பித்துப் பாடியுள்ளனர். நமது கவிஞரும் திருநீலகண்டனின் 'திரிபுர தகனத்தை'ச் சிறப்பித்துப் பல இடங்களில் பாடியிருக்கிறார். குறிப்பாக செயங்கொண்ட சோழீசர் சதகம் பாடிய பாடுவார் முத்தப்பர் மொழிகளையே பொன்னே போல் ஏற்று - நேமங்கோவில் சோழீசன் "சிரித்துத் திரிபுரம் எரித்துச் செயங்கொண்டான்" என்று கூறி சர்வ வல்லமையுள்ள தனிக்கடவுள் சதாசிவன்தான் எனக் குறிப்பிட்டு நகரத்தார் சைவ சமயச்சார்புடையவராகத் திகழ்வதற்குக் காரணமாயிருக்கிறார்!

அறிவிற் சிறந்த அபிராமிப்பட்டர் - "அறியாழி அரிதுயிலும் மாயனது தங்கையான - ஆதி கடவூரின் அரசி - அபிராமி", "அமுதீசர் ஒரு பாகம் அகலாத சுகபாணி" என்றும், "எரிபுரைமேனி இறைவர் செம்பாகத் திருந்தவளே" என்றும் பார்வதி ஈஸ்வரனின் "பாகத்தில் நேர்கிழையாக" பங்குகொண்டவள் என்றும் பாடுவார். அமிழ்தத் திருப்புகழ் பாடிய அருணகிரியார் வேறுவிதமாக, "தியாகப் பொருப்பை, திரியம்பகனை, திரிபுராந்தகனைப் பாகத்தில் வைத்தாளும் பரம கல்யாணி" - எனப் பார்வதியின் பாகத்தில் தான் பசுபதி இடங்கொண்டான் என்பார். இவ்விதமே நம் கவிஞரும், "முக்கண்ணன் மாதொருத்தி பாகன்" என்றும், "பெருந்தேவி இடத்தமர்ந்த பெம்மானே" என்றும், சாமளை தோளில் தம்முடல் பாதி கொண்டவளே" என்றும், "சோதிக்கடவுள் மங்கை செம்பாதிக் கடவுள்" என்றும் கூறி, சக்தி உடலில் தான் சங்கரன் பங்குடையவர் என்பார்.

உமையொருபாகன் - உமையை ஒரு பாகமாக உடையவன் அல்லன், உமையின் ஒரு பாகமாக இருப்பவன் என்று கூறி - நகரத்தார்கள் - அன்னை பராசக்தியையும் - சிவகாமவல்லியாக, வாடாமலர் மங்கையாக, நித்திய கல்யாணியாக, வடிவுண்ட

அம்மனாக, சௌந்தர நாயகியாக, ஆவுடை நாயகியாக, காமாட்சியாக, சிவபுரந்தேவியாக, பெரியநாயகியாக, சிவனுடன் சேர்த்தே வழிபட்டு வருவதை, சக்தியின்றிச் சிவம் இல்லை - சிவம் இன்றிச் சக்தி இல்லை - என்ற நுட்பமான இறைத் தத்துவத்தைப் பதிகம் முழுவதும் பலபடச் சித்தரித்திருப்பதும் பாராட்டுக்குரியது!

உலகம் உணர்ந்து ஓதுதற்கரியவனை - ஒன்பது நகரக் கோவில் பதிகத்தில் பாடி - "சங்கம் முதல் இன்று வரை தமிழ் இறைவன் சிவனே" என்றும் முடிக்கிறார்.

"தாமின்புறுவது உலகின்புற வேண்டும்" என்ற பெருநோக்குடன் எழுந்த கவிஞர் சிதம்பரத்தின் இந்தச் சீரிய முயற்சி - மல்லைச் சிற்ப மாமணிக் கோவிலைப் போன்ற சிறப்புடையது. பதிகத்தில் உள்ள பாக்கள் அனைத்தையும் ஆதிமுதல் அந்தம் வரை அனைவரும் கற்கவேண்டும். அதன் பயன் அளப்பரியது.

பதிகம் பாடிய நாவலருக்கும், படிக்கும் நகரத்தார்க்கும், நாட்டவர்க்கும், நாமம் ஆயிரம் உடைய நமச்சிவாயன் நலம் பல அருளி, வளம் பல சேர்ப்பானாக!

தரயிற் சிறந்த தயவுடைய அத்தனுக்கு ஆளாகிவிட்டோம்; நாமார்க்கும் குடியல்லோம்; நமனை அஞ்சத்தேவை இல்லை; மண்ணில் நல்லவண்ணம் வாழலாம்!

**கட்டளைக் கலித்துறை**

*வான்புகழ் கோட்டை நகரத்தார் செட்டித் தனவணிகர்*
*வான்மகிழ் தேவர்க்கே வற்றாத செல்வத்தி னால்செழியர்*
*கோன்மகிழ் கோவில்கள் ஒன்பதாய் கண்டகுணச் சிறப்பைத்*
*தேன்தமிழ்ப் பாக்களாய்ச் செய்தனன் காரைச் சிதம்பரனே!*

06-12-2002 *அரியக்குடி சித. வேங்கடாசலம்*
சென்னை.

# அறிமுக உரை

- முனைவர் கரு. முத்தையா

"கோவில் சார்ந்த குடிகள். குடிகளைத் தழுவிய கோவில்" எனத் தமிழ்ச் சமுதாய மரபில் வந்த சமூகம் நகரத்தார் சமூகம். நகரத்தாருக்குரிய அடிப்படை அடையாளமாக அமைபவை ஒன்பது நகரக் கோவில்களே.

அவை ஒன்பதையும் பற்றி, தேவாரப்பண்களை அடியொற்றி, ஒரு கவிதை நூல்யாக்கும் பணியில் நண்பர் சித. சிதம்பரம் முனைந்து, இப்போது நூல் வெளிவருகிறது. இது ஒரு நன்முயற்சி. கவிஞர் சித. சிதம்பரம் எனக்கு நீண்டநாள் நண்பர். எங்கள் நட்பை அவர்தம் கவிதையில் பதிவு செய்துள்ளார்.

"அரைக்கால் சட்டையுடன்
அலைந்த காலமுதல்
முளைவிட்ட நட்பிற்கு
முத்திரையே முத்தையா"

*(நெருப்புத் துண்டுகளும் பனிப்போர்வைகளும் -ப. 53)*

நண்பர் உணர்ச்சி மிகுந்த கவிஞர். தமது புதுக்கவிதைப் படைப்புக்களை "மௌனங்கள் மொழி திறக்கும்", "நெருப்புத் துண்டுகளும் பனிப்போர்வைகளும்" என இரு நூல்களாக வெளியிட்டுள்ளார். இந்நூலை மரபுக்கவிதையாக தேவார அடிச்சுவட்டில், நகரக் கோவில்களைப் பற்றி எழுதியுள்ளார்.

நகரத்தார் கோவில்கள் ஒன்பதையும் பற்றி ஆய்வு செய்து, முனைவர் பட்டம் பெற்றவர் நண்பர் வ. தேனப்பன். அவர்தம் ஆய்வினை நூலாக வெளியிட்டுள்ளார். அவர் இக்கவிதை நூலைக் கையெழுத்துப்படியில் முழுமையும் படித்துப் பாராட்டியுள்ளார் என்பது இந்நூலுக்கு ஒரு சிறந்த நற்சான்றிதழாகும்.

நகரத்தார் கோவில்கள் ஒன்பதில் ஏழு பற்றி, தனித்தனி, முழுநூல்கள் எழுதியிருப்பவர் திரு. மா. சந்திரமூர்த்தி ஆவார். (இளையாத்தங்குடி, வேலங்குடி இரண்டு பற்றியும் அவரது நூல்கள் விரைவில் வெளிவர உள.)

இவை உரைநடை வடிவத்தில், ஆய்வு நோக்கில் அமைந்த நூல்கள். நம் கவிஞரது நூல், கவிதை வடிவில், வழிபாட்டுக்குப் பயன்படும் போக்கில் உருவாகியுள்ள நூல். நூலின் பாடுபொருளாகிய ஒன்பது கோவில்களையும், அவை சார்ந்த பதிகங்களையும் பற்றிய விரிவான அறிமுக உரை இது.

**இளையாத்தங்குடி :**

நகரக் கோவில்கள் ஒன்பதிலும் காலத்தால் முந்திய முதற்கோவில் இது. தேவர்களின் இளைப்பை ஆற்றியதால் இப்பெயர் பெற்றதெனத் தலபுராணம் கூறுகிறது. ''புகார் விடுத்துப் பாண்டி நாட்டில்' வாழ, 'தொன்மைமிகு தமிழ்ச் சைவக் குடியோராகிய நகரத்தார் வந்தபோது அவர்தம் இளைப்பை ஆற்றியகுடி என நம் கவிஞர் தற்குறிப்பேற்றத்தோடு கூறுகிறார்.

"கல்வாச நாட்டில் இளையாத்தங்குடியான குல சேகரபுரத்தில்" எனத் தொடங்கித் தத்தம் பிரிவினை இசைகுடிமானத்தில் எழுதுவர், இக்கோவில் சார்ந்த நகரத்தார் அவர்கள் ஏழு உட்பிரிவுகளை உடையவர்கள் ஒக்கூரார், பட்டினச்சாமியார், பெருமருதூரார், கழனிவாசற்குடியார், கிண்கினிக்கூருடையார், பேராசெந்தூருடையார், சிறுசேத்தூருடையார் என்ற அந்த ஏழு பிரிவுகளையும்

கைலாசநாதர் பதிகத்தின் ஆறாவது பாடலில் பதிவு செய்கிறார் கவிஞர்.

மேலும் கழனிவாசற்குடியார் இங்கு ஆதிகேசவப்பெருமாள் கோவில் அமைந்திருக்கும் செய்தியையும் 'தனிக் கழனிவாசலூரார் பெருமாள் கண்டார்' எனக் குறிப்பிடுகிறது பதிகப்பாடல்.

இக்கோவில் சார்ந்த நகரத்தார் 6500க்கும் மேற்பட்ட புள்ளிகள். இவர்கள் செட்டிநாட்டில் 64 ஊர்களில் வாழ்ந்து வருகின்றனர். நித்தியகல்யாணி உடனாய கைலாசநாதர் கோவிலுக்கு1939, 1958, 1985 ஆகிய ஆண்டுகளில் குடமுழுக்கு விழாக்கள் நிகழ்ந்துள்ளது. இப்போது அடுத்த குடமுழுக்கிற்குறிய ஆயத்தப் பணிகள்(06-03-2003 அன்று பாலாலயமும், தச்சும் செய்யப்பெற்றன) நடைபெற்று வருகின்றன.

**மாத்தூர்:**

இலுப்பைக்குடித் தலபுராணம், கொங்கணச்சித்தர் இரசவாதத்தால் உருவாக்கிய தங்கத்தின் மாற்று உரைத்துப் பார்த்த ஊர் இது எனச் சொல்கிறது. அதனால் மாற்றூர் எனப் பெயர் பெற்று பின் மாத்தூர் என மருவியிருக்க வேண்டும்; நம் கவிஞரும் இதே கருத்தை "ஓட்டைப்பொன் ஆக்குகையில் உயர் செம்பும் ஆகாதோ" எனவும் " கொங்கணர்தான் வழுத்த" எனவும் குறிப்பிடுகிறார்.

"கேரள சிங்கவளநாடாகிய பிரம்பூர் நாட்டில் மாற்றூரான வீரபாண்டியபுரத்தில்" எனத் தொடங்கித் தத்தம் பிரிவினை இசைகுடிமானத்தில் எழுதுவர் இக்கோவில் நகரத்தார். இவர்களும் ஏழு உட்பிரிவுகளை உடையவர்கள். உறையூருடையார், அரும்பாக்கூருடையார், மணலூருடையார், மண்ணூருடையார், கண்ணூருடையார், கருப்பூருடையார், குளத்தூருடையார் என்பவை அவ்வேழு பிரிவுகள். ஏனோ, இப்பதிகத்தில் இப்பிரிவுகள் பற்றிய குறிப்பு இடம்பெறவில்லை.

சிதம்பரம், மாத்தூர் கோவிலைச் சார்ந்தவர். அதனைக் குறிப்பாகத் தம் பாடலில் கோடிட்டுக்காட்டுகிறார்.

"என் அப்பன் பாட்டெனென எத்தனையோ தலைமுறைகள்
என் அப்பன் இவனெனவும் என்னம்மை உடன்வரவும்
முன்ஒப்பிக் குடிவிளங்க முன்னெழுந்த பெம்மானே"

என ஐநூற்றீசர் தம் தலைமுறையினரின் வழிபாடு கடவுள் என்பதை விளக்குகிறார்.

இக்கோவில் சார்ந்த நகரத்தார் ஏறத்தாழ 7,000 புள்ளிகள். இவர்கள் செட்டிநாட்டில் 55 ஊர்களில் வாழ்ந்து வருகின்றனர். பெரியநாயகி உடனாய ஐந்நூற்றீசுவரர் கோவிலுக்கு 1949, 1974, 1988, 2002 ஆகிய ஆண்டுகளில் குடமுழுக்கு விழாக்கள் நிகழ்ந்துள்ளன.

**வைரவன் கோவில் :**

சிவபெருமான் வைரவர்கோலம் பூண்டு சம்பகாசூரனை அழித்த தலம் இது என்பர். எனவே இது வைரவன் கோவில் எனப் பெயர் பெற்றது. மற்ற திருக்கோவில்களில் அம்மன் சன்னதி அமைந்துள்ள இடத்தில் இங்கு வைரவர் சன்னதியும், அதனையடுத்து அம்மன் சன்னதியும் அமைந்துள்ளன.

இவ்வாறு இக்கோவிலில் வைரவர் பெறும் சிறப்பிடத்தைப் பதிகம் "சம்பகாசூரனை வயிரவர் கோலமிட்டு ........கொந்திய கோலமே நின்றிடும் கோயிலே" எனக்குறிப்பிடுகிறது.

"கேரள சிங்க வளநாடாகிய ஏழகப் பெருந்திருவான் வீரபாண்டியபுரத்தில்" எனத் தொடங்கித் தத்தம் பிரிவினை இசைகுடிமானத்தில் எழுதுவர் இக்கோவில் நகரத்தார், பதிகமும்

"சோழனின் தேசமும் ஆழியின் ஓரமும்
சோதனை தந்ததாலே

ஏழகப் பெருந்தெரு வயிரவன் கோயிலை

ஏற்றவர் நகரத்தார்" எனப் பதிவு செய்கிறது.

இக்கோவில் மூன்று உட்பிரிவுகளை உடையது. அவை சிறு குளத்தூருடையார், கழனிவாசலுடையார், மருதேந்திரபுரமுடையார் என்பன. இவற்றுள் சிறுகுளத்தூருடையார் எனும் உட்பிரிவு மூன்று வகுப்புக்களைக் கொண்டது. அவை, பெரிய வகுப்பு, தெய்வநாயகர் வகுப்பு, பிள்ளையார் வகுப்பு என்பவை.

தெய்வநாயகர் வகுப்பு என்பது தெய்யனார் வகுப்புஎன மருவி வழங்குகிறது. இப்பெயரையுடைய தெய்யனாஞ் செட்டியாரின் சதாசேவைச் சிற்பம் வைரவர் சன்னதிக்கு முன்பாக அமைந்துள்ளது. அதனைப் பதிகம், "தெய்யனாம் செட்டியும் சொக்கராம் செட்டியும் சிலையென நின்றிருப்பர்" எனக் குறிப்பிடுகிறது.

இங்கே கோவிலின் தென்மேற்குப் பகுதியில் உள்ள 'வைரவ தீர்த்தம்' எனும் ஊருணியின் சிறப்பைப் பதிகம்

"சாபமும் தீர்த்தழித்துப்
பாவமும் போக்கும் புண்ணியம் பெருகிடும்
வைரவ தீர்த்தமுண்டு" எனச் சுட்டுகிறது.

இக்கோவில் பிரகாரத்தில் வடமேற்கில் அமைந்துள்ள சண்டிகேசுவரர் சிற்றாலயம் தனிச் சிறப்புடையது. 20 டன் எடையுள்ள ஒற்றைக் கல்லால் உருவாக்கப்பட்டுள்ள கற்றளி இது. இதனை நம் கவிஞர்,

"சண்டிகேசுவரரே தவநிலை கற்றளி
தானிருந்தருள் தரும் வயிரவன்
கோயிலாமே"

என்று பாடிப்பரவுகிறார்; இத்தலத்தில் தலவிருட்சம் ஏறழிஞ்சி மரம் என்பதையும், 'அழிஞ்சில் மரத்தடி அமர்ந்த வண்ணமே' எனப் பாடுகிறார்.

இக்கோவில் சார்ந்த நகரத்தார்கள் ஏறத்தாழ 5,500 புள்ளிகள். இவர்கள் செட்டிநாட்டின் 58 ஊர்களில் வாழ்ந்து வருகிறார்கள். வடிவுடையம்மை உடனாய வளரொளிநாதர் கோவிலுக்கு, 1894, 1907, 1928, 1959, 1982, 1996 ஆகிய ஆண்டுகளில் குடமுழுக்கு விழாக்கள் நிகழ்ந்துள.

**நேமங்கோவில் :**

நியமம் எனும் சொல்லே நேமம் என மருவியதென்பர். நியமம் என்ற சொல்லுக்கு வணிகர் குழு என ஒரு பொருளுண்டு. வணிகர் குழுவுக்கு (நகரத்தார் சமூகத்தின் ஒரு பிரிவுக்கு) அரசரால் அளிக்கப்பெற்ற கோவிலாதலால் இது இப்பெயரைப் பெற்றது.

"கேரளசிங்க வளநாட்டில் நேமமாகிய குலசேகரபுரத்தில் இளநலமுடையார்" என்று இக்கோவில் நகரத்தார் இசைகுடிமானத்தில் தம்மைக் குறிப்பிடுவர்.

இக்கோவிலின் இரண்டாம் திருச்சுற்றில் திருமதிலின் பின்புறம் உருவமின்றிச் சக்திபீட வடிவில் நேமங்காளி வீற்றிருக்கிறாள். இப்பகுதியில் மிகவும் சீற்றமுடைய தெய்வமாகக் கருதப்படும் இக்காளிக்கு வைராவிகள் பூசைசெய்து வருகின்றனர். பதிகம் காளியை

"நேமம் பீடம் நேர்ந்த காளி பக்கலிலே" என இனம் காட்டுகிறது.

இக்கோவில் நகரத்தார்களில் நம் சமூகத்தின் சிறந்த கவிஞராகிய பாடுவார் முத்தப்பர் குறிப்பிடத்தக்கவர். அவர் பாடிய செயங்கொண்ட சோழீசர் சதகம், இக்கோவில் மற்றும் தெய்வங்களின் சிறப்பை என்றும் உணர்த்தும் எழுத்தோவியமாகும். அதனை நம் கவிஞர்,

"அயன் கண்டறியா மால் கண்டறியா அடிமுடிகள்
நயன் கண்டறிவார் பாடுவார் அய்யா முத்தப்பர்
.... .... .....
செயங்கொண்டார் மேல் சதகம் பாடிச்

செயங்கொண்டார்' எனக் குறிப்பிட்டு முன்னோரை நினைந்து போற்றுகின்றார்.

இக்கோவில் சார்ந்த நகரத்தார்கள் ஏறத்தாழ 2000 புள்ளிகள். இவர்கள் செட்டிநாட்டின் இருபது ஊர்களில் வாழ்ந்து வருகின்றனர். சௌந்தரநாயகி உடனாய செயங்கொண்ட சோழீசர் கோவிலுக்கு 1907, 1961, 1991 ஆகிய ஆண்டுகளில் குடமுழுக்கு விழாக்கள் நிகழ்ந்துள்ளன.

**இலுப்பைக்குடி :**

இப்பகுதியில் இலுப்பை மரங்கள் மிகுந்திருந்தமையால் இவ்வூர் இப்பெயர்பெற்றது. இக்கோவில் நகரத்தார் இசைகுடிமானத்தில், "கேரளசிங்கவளநாடாகிய பிரம்பூர் நாட்டில் இலுப்பைக்குடியான புகலிடங் கொடுத்த பட்டணத்தில் சூடாமணிபுரமுடையார் என்று தம்மைக் குறிப்பிடுவர்.

கும்பாண்டகன் எனும் அசுரனுக்கு அஞ்சித் தேவர்கள், சிவபெருமானைத் தஞ்சம் அடைந்தபோது, அவர் இத்தலத்தில், தேவர்களுக்குப் புகலிடம் கொடுத்தார்; தாம் வைரவர் கோலம் ஏற்றுக்கும்பாண்டகனை அழித்தார் என்று இத்தலத்தின் புராணம் கூறுகிறது. அதற்கேற்ப இக்கோவிலில் வைரவர் வழிபாடு தனிச்சிறப்புடையதாக அமைந்துள்ளது. இசைகுடிமானத்தில் புகலிடங் கொடுத்த பட்டணம்' என்ற தொடரும் இதனை உணர்த்துகிறது.

இச்செய்திகளைப் பதிகம்,

> "வகையறியா இந்திரர்க்காய் வயிரவராம்
> மூர்த்தியாகிப்
> புகலிடம் கொடுத்தவனே" என்றும்,
> "கும்பாண்ட அசுரனுக்குத் தேவர்குழாம் தாம்
> பயந்து நம்பியே சரணென்னத் திரிசூல
> நடனமிட்டு

வம்பர்களை அழித்தவனே" என்றும் கூறுகிறது.

மாற்றூரில் இரசவாதப் பொன்னின் மாற்றுணர முயன்ற கொங்ணச் சித்தர் இத்தலத்தில் சிவனை வணங்கிப் பேறு பெற்றதாகத் தலபுராணம் கூறுகிறது. அதனை நம் கவிஞர் பதிகத்தின் எட்டாம் பாடலில் சுட்டிக் காட்டுகிறார்.

இக்கோவில் சார்ந்த நகரத்தார்கள் ஏறத்தாழ 3000 புள்ளிகள். இவர்கள் செட்டிநாட்டின் 31 ஊர்களில் வாழ்ந்து வருகின்றனர். சௌந்தரநாயகி உடனாய தான்தோன்றிசுவரர் கோவிலுக்கு 1842, 1882, 1901, 1959, 1985, 2003 ஆகிய ஆண்டுகளில் குடமுழக்கு விழாக்கள் நடைபெற்றுள்ளன.

**சூரைக்குடி :**

சூரை மரங்கள் நிறைந்திருந்ததால் இவ்வூர் இப்பெயர் பெற்றது. இக்கோவில் நகரத்தார் இசைகுடிமானத்தில் "கேரளசிங்கவள நாட்டில் சூரைக்குடியான தேசிகநாராயணபுரத்தில் புகழ் வேண்டியபாக்கம் உடையார்" என்று தம்மைக் குறிப்பிடுவர்.

நகரத்தார் ஒன்பது கோவில்களுள், இங்கு மட்டுமே அம்மன் நான்கு திருக்கைகளுடனும், மூன்று கண்களுடனும் காட்சி தருகிறார். இக்கோவிலின் தட்சணாமூர்த்தி சிற்பமும், பிறகோவிளிலிருந்து வேறுபடுகிறது. பொதுவாகத் தட்சணாமூர்த்தியின் முதுகுப் பகுதியும், ஆலமரத்தின் தண்டுப்பகுதியும் சேர்ந்தே காணப்படும். ஆனால் இங்கு மட்டும் அவ்விரண்டும் தன்னந்தனியே தோன்றும் வண்ணம் ஒரே கல்லில் செதுக்கப்பெற்றுள்ளது.

இக்கோவிலின் தட்சிணாமூர்த்தி சிற்பச் சிறப்பைக் குறிப்பாக உணர்த்தும் வகையில், நம் கவிஞர் இக்கோவில் பதிகத்தின் முதற்பாடலையே,

"ஞான முத்திரை தானுரைத்திடு நாயகன்" என்று தொடங்குகிறார்.

இக்கோவில் சார்ந்த நகரத்தார்கள் ஏறத்தாழ 1500 புள்ளிகள். இவர்கள் செட்டிநாட்டின் 25 ஊர்களில் வாழ்ந்து வருகின்றனர். ஆவுடைநாயகி உடனாய தேசிகநாதர் கோவிலுக்கு 1898, 1943, 1952, 1973, 1994 ஆகிய ஆண்டுகளில் குடமுழுக்கு விழாக்கள் நிகழ்ந்துள்ளன.

**வேலங்குடி :**

இப்பகுதியில் வேலமரங்கள் மிகுதியாக இருந்ததனால் இவ்வூர் இப்பெயர் பெற்றது. இக்கோவில் நகரத்தார்கள் இசைகுடிமானத்தில் "கேரள சிங்க வளநாடாகிய பாலையூர் வேலங்குடியான தேசிக நாராயணபுரத்தில் கழனிநல்லூருடையார்" என்று தம்மைக் குறிப்பிடுவர்.

ஒன்பது கோவில்களுள், இக்கோவில் சார்ந்த புள்ளிகளே எண்ணிக்கையில் மிகவும் குறைவானவர்கள். இதற்குக் குருவின் சாபமே காரணம் என ஒரு கர்ணபரம்பரைக் கதை நிலவுகிறது. அச்சாபத்திலிருந்து விடுபடவதற்காக, இங்கு தட்சணாமூர்த்திக்கு ஒரு தனிக் கோவில் கட்டப் பெற்றுள்ளது.

இக்குறிப்புக்களைப் பதிகம்,

"சிற்சில புள்ளிகூடிச் செயசெய பலராய்மேவ
மெச்சிடச் செய்வாய் ஐயா !" என்றும்,
"மாமாட்சி வேலங்குடிக்கு மல்குக குருவின் பார்வை
ஓமாட்சி செய்து புள்ளி உயர்ந்திட உதவுவாயே"

எனவும் பதிவு செய்கிறது.

இங்கு தேசிகநாராயணப் பெருமாள் கோவில் எனப் பெருமாள் கோவில் ஒன்றும் உள்ளது. அது குறித்துப் பதிகம் வெளிப்படையாகச் சொல்லவில்லை. ஆயினும் கவிஞர், இறுதிப் பாடலில், திருஞானசம்பந்தர் கச்சிக் கோவிலில் திருமாலைச் சிவனாக மாறச் செய்த அதிசயத்தைக் குறிப்பிடுவது ஒரு மறைமுகக் குறிப்போ? எனத் தோன்றுகிறது.

இக்கோவில் சார்ந்த நகரத்தார்கள் ஏறத்தாழ 50 புள்ளிகள். இவர்கள் செட்டிநாட்டின் நான்கு ஊர்களில் வாழ்ந்து வருகின்றனர். காமாட்சி உடனாய கண்டீசுவரர் கோவிலுக்கு 1937ஆம் ஆண்டில் குடமுழுக்கு விழா நடைபெற்றுள்ளது.

**இரணிக் கோவில் :**

நரசிம்மாவதாரத்தில் இரணியனைக் கொன்ற பாவம் நீங்கத் திருமால் சிவபெருமானை இத்தலத்தில் வழிபட்டதாகக் கூறும் புராணக்குறிப்பின் அடிப்படையில் இவ்வூர் இரணியூர் எனப் பெயர் பெற்றது. இக்குறிப்பைப் பதிகம், 2 மற்றும் 3 ஆம் பாடல்களில் விளக்குகிறது.

இளையாத்தங்குடிக் கோவிலைச் சேர்ந்த திருவேட்பூருடையார் என்னும் பிரிவினரான சகோதரருள் மூத்தவர் வழியினர் இரணிக் கோவிலைத் தமக்குரிய தனிக் கோவிலாக்க் கொண்டு வாழலாயினர். இதனால் இக்கோவில் நகரத்தார்கள் இசைகுடிமானத்தில், "கல்வாச நாட்டில் இளையாத்தங்குடியான குலசேகரபுரத்தில் இரணியூர் மருதங்குடியான இராசநாராயணபுரத்தில் இரணியூர்த் திருவேட்பூருடையார்" என்று தம்மைக் குறிப்பிடுவர்.

இங்கே நீலமேகப் பெருமாள் கோவில், பத்திரகாளி அம்மன் ஆகியவையும் அமைந்துள. இக்கோவில் செட்டிநாட்டின் சிற்பக் களஞ்சியமாகத் திகழ்கிறது.

இக்கோவில் சார்ந்த நகரத்தார்கள் ஏறத்தாழ 3000 புள்ளிகள். இவர்கள் செட்டிநாட்டின் 35 ஊர்களில் வாழ்ந்து வருகின்றனர். சிவபுரந்தேவி உடனாய ஆட்கொண்டநாதர் கோவிலுக்கு 1928, 1944, 1990 ஆகிய ஆண்டுகளில் குடமுழுக்கு விழாக்கள் நடைபெற்றுள்ளன.

**பிள்ளையார்பட்டி :**

குன்றில் குடையப் பெற்ற குடைவரைக் கோவிலில் அமர்ந்தருள் செய்யும் கற்பகப் பிள்ளையார் வழிபாடு இங்கு சிறப்புற்றதால் இவ்வூர் இப்பெயர் பெற்றது.

இப்பிள்ளையார் சிற்பம் மிக அரிய சிற்பமாகும். இரண்டே கைகள் உள்ள பிள்ளையார் சிற்பம் இங்கும், ஆப்கானிஸ்தானத்திலும் தவிர உலகில் வேறெங்கும் இல்லை என்பர். இங்குள்ள கல்வெட்டின் எழுத்தமைப்பை வைத்து இக்குடைவரைக் கோவில் கி.பி. 5ஆம் நூற்றாண்டினது என்பர். இச்செய்திகளைப் பதிகம்,

"பண்டைப் பழங்கோவில் பாண்டித்தலக் கோவில்
அண்டைப் பெருநாட்டில் யானைவளர் கோவில்"

எனப் பதிவு செய்கிறது.

இவ்வாறு கற்பகப்பிள்ளையாரும், திருவீசரும் எழுந்தருளியிருந்த குடைவரைக்கோவிலோடு, இணைந்த கோவிலாக மருதீசர் கோவிலைக் கற்றளியாக நகரத்தார் உருவாக்கினார் என்பர். எனவே, இங்கு மூலவர்கள் மூவர்

திருவீசர்-சிவகாமி
மருதீசர்-வாடாமலர் மங்கை
கற்பகப்பிள்ளையார். இம் மூவரையும் பதிகம் பரவுகிறது.

இளையாத்தங்குடியைச் சேர்ந்த திருவேட்பூருடையார் என்ற சகோதரர்களில் இளையவர் வழியினர் பிள்ளையார்பட்டியைத் தங்களுக்குறிய தனிக்கோவிலாகக் கொண்டு வாழலாயினர். எனவே, இக்கோவில் நகரத்தார் இசைகுடிமானத்தில் "கல்வாசநாட்டில் இளையாத்தங்குடியான குலசேகரபுரத்தில் இரணியூர் மருதங்குடியான இராசநாரயணபுரத்தில் பிள்ளையார்பட்டியான திருவேட்பூருடையார்" என்று தம்மைக் குறிப்பிடுவர்.

இங்கு சைவ ஆகமங்களையும், வேதங்களையும் அந்தணச் சிறுவர்களுக்குக் கற்பிக்கும் பள்ளி ஒன்று சிறப்பாக இயங்கி வருகிறது. இதனை நம் கவிஞர்

" வேதம் பயில்வாரை வெண்ணீறணிந்தாரை
... ... ... ..................... பாங்காய் செய்வாரே

மாது மலர் வாடா மருதீச்சுரரே"எனச் சுட்டுகிறார்.

இக்கோவில் சார்ந்த நகரத்தார்கள் ஏறத்தாழ 3,500 புள்ளிகள். இவர்கள் செட்டிநாட்டின் 41 ஊர்களில் வாழ்ந்து வருகின்றனர். பிள்ளையார்பட்டித் திருக்கோவிலுக்கு 1899,1928,1933,1951,1976,1992, ஆகிய ஆண்டுகளில் குடமுழுக்கு விழாக்கள் நடைபெற்றுள்ளன.

**நகரத்தார் சமூகம்:**

அந்தந்தக் கோவில் பற்றிய பதிகப்பாடல்களில் அந்தந்தக் கோவிலின் சிறப்புகளை விளக்கும் கவிஞர் நூல் முழுமையிலும், ஆங்காங்கே நகரத்தார் சமூகத்தின் வரலாறு, சிறப்பு, அறப்பணி ஆகியவற்றையும் உணர்த்திச்சொல்கிறார்.

**வரலாறு:**

நகரத்தார்கள் தொடக்கத்தில் நாக நாட்டிலும், பின்னர் புகார் நகரிலும் வாழ்ந்து, அதற்குப் பின்னரே இப்போதையச் செட்டிநாட்டிற்கு வந்தனர் என்பது வரலாறு. இதனை,

" ஒரு நாக நாட்டிருந்தும் புகார் விடுத்தும்
உருவான செட்டிநாட்டில்" (இரணியூர்) என்றும்;
" சோழநிலாப் புகார் விடுத்துப்பாண்டி நாட்டில்,
... ... ... வாழ வரும்போது" (இளையாத்தங்குடி)

என்றும்,

" மருதநிலமிருந்து பாலைநிலம்குடி புகுந்து
(இலுப்பைக்குடி) என்றும் நூல் குறிப்பிடுகிறது.

சோழ நாட்டிலிருந்து குடிபெயர்ந்ததற்கு அரசன், ஆழி இருவரும் கொடுத்த தொல்லைகளே காரணம் என்று வரலாறு கூறுகிறது. அதனை,

" சோழனின் தேசமும் ஆழியின் ஓரமும்
சோதனை தந்ததாலே
" ஏழகப்பெருந்திரு வைரவன் கோவிலை

ஏற்றவர் நகரத்தார்" (வைரவன் கோவில்) என்று சுட்டுகிறார் கவிஞர்.

மேலும்,

" கண்ணகியின் மரபினோர்" (இளையாத்தங்குடி)

" ஆன பிரிவில் ஒன்பானாய் வாழ வந்தார்" (இயைாத்தங்குடி)

" ஒக்கூரார் தலைதந்தே அறத்தைக் காத்தார்" (இளையாத்தங்குடி)

" பாடுவார் அய்யா முத்தப்பர் செயங்கொண்டார் மேல் சதகம் பாடிச் செயங்கொண்டார்" (நேமம்) என்பவையும் நகரத்தார் வரலாற்றில் குறிப்பிடத்தக்க தனிச் சுவடுகள் என்பது நினைந்து போற்ற தக்கது.

**சிறப்பு:**

எக்காலத்திலும் மதம் மாறாமல் சைவம் போற்றும் சமூகம் என்பது நகரத்தார் சிறப்பு அதனை,

" தொன்மை மிகு தமிழ்சைவக் குடியோர்" (இளையாத்தங்குடி) என்றும்,

" எல்லை மீறாமல் எந்நாளும் சிவனடியே
தொல்லை நீக்குகின்ற துணையெனவே கொண்டவர்கள்" (இலுப்பைக்குடி) என்றும் விளக்குகிறார் நூலாசிரியர்.

**அறப்பணி:**

நகரத்தார், அறப்பணிச்செல்வர்கள் என்பது நாடறிந்த உண்மை. இதனை இந்நூல் கீழ்வரும் இடங்களில் கீழ்க்காணும் வண்ணம் பதிவு செய்கிறது.

"செய்யெலாம் ஆழவும் மண்டபம் கட்டவும்
செய்தவர் செய்ய முன்னோர்" (வைரவன் கோவில்)

"வாழ்விலே பல்கியே மரபெலாம் பெருகவே
வாரியே தந்தவர்காண்" (வைரவன் கோவில்)

"மருதவளமெலாம் பாலையிலே தான் தேக்கி" (இலுப்பைக்குடி)

"மல்லைச் சிற்ப வழி மணிக்கோவில் கண்டவர்கள்" (இலுப்பைக்குடி)

"நகரத்தார்கள்
பெருவாரி அறமியற்ற" (இரணிக் கோவில்)

இவ்வாறு நகரத்தார் சமூகம் பற்றியும் அவர்தம் அடிப்படை அடையாளமாகத் திகழும் ஒன்பது நகரக்கோவில்கள் பற்றியும், குறிப்பிடத்தக்க சிறப்புகளையெல்லாம் குறிப்பிடும் நூல் இது. என்றாலும் பொதுவாகச் சிவபெருமானின் பெருமைகளைத் தொகுத்துச் சொல்லி, அவனைத் தொழுவதனால் பெறும் பயன்களை வகுத்துச் சொல்லும் ஒரு தோத்திர நூலாக, வழிபாட்டு நூலாகவே இது இயங்குகிறது.நகரத்தார் அனைவரும் தம் இல்லங்களில் இந்நூலை வாங்கி வைத்து இப்பாடல்களை (பாராயணப் பாடல்களாக) பயன்படுத்துவது நன்மையையும், பெருமையையும் தரும்.

காரைக்குடி

அன்புடன்

கரு. முத்தையா.



செட்டிநாட்டு ஆச்சிகளின்

சிறப்பையெல்லாம் பிரதிபலிக்கும் என்

தங்கை தெய்வானைக்கும்

மகள் முத்துவிற்கும்

உ
சிவமயம்

# கற்பகவிநாயகர் துதி

எண்திசைக்கும் நின்றிசைக்கும்
ஈசனாரின் புத்திரன்
கந்தனுக்கு முன்பிறந்த
தொந்தி கொண்ட சித்திரன்
சந்தனத்தைப் பொன்தனத்தை
தந்திருக்கும் அற்புதன்
சந்ததிக்கும் தன் துதிக்கை
முன்பளிக்கும் கற்பகன்!

அன்றும் இன்றும் என்றும் உன்றன்
பாதமே அடைக்கலம்
கன்று நின்று அன்பு தந்த
கற்பகன் அடைக்கலம்
மன்றில் நின்று கொஞ்சும் பிள்ளை
நெஞ்சுவந்த வார்த்தைகள்
என்றும் வென்றி கொள்ளவேண்டி
ஏந்தல்யானை அடைக்கலம்!

* * * *

# சிதம்பர விநாயகர் வணக்கம்

கொப்பத்தாள் ஊரிருந்து குன்றக் குடிவழியில்
அப்பச்சி போற்றிய ஆனைமுகா! - செப்பும்
கவிபாடிச் சாதித்துக் காலத்தை வென்று
புவிவாழ அன்பைப்பொழி!

# இளையாத்தங்குடி
## நித்தியகல்யாணி உடனாய
## கைலாசநாதர் பதிகம்

(திருத்தாண்டகம் ஒற்றி)

இப்பிறப்பில் எமக்கருள வந்தான் கண்டீர்
இனிப்பிறப்பே நேராமல் செய்வான் கண்டீர்
முற்பிறப்பின் வினைபோக்கி அழிப்பான் கண்டீர்
முக்கண்ணன் மாதொருத்தி பாகன் கண்டீர்
கற்பனைகள் கற்பனையுள் கயிலா யத்தில்
காண்பவற்றில் அல்லவற்றில் நிறைந்தான் கண்டீர்
சர்ப்பத்தை மாலையாக்கும் சடையன் கண்டீர்
தண்ணிழல்சேர் இளையாத்தங் குடியான் தானே!

சோழநிலாப் புகார்விடுத்துப் பாண்டி நாட்டில்
தொன்மைமிகு தமிழ்ச்சைவக் குடியோர் முன்னாள்
வாழவரும் போதவரின் இளைப்பை மாற்றி
வளம் சேர்க்கும் நித்தியகல்யாணி அம்பாள்
சூழநிறை கயிலாய நாதன் தன்னை
சுடர்விளக்கைத் தொன்மையனை மரபைப் போற்றும்
ஏழகத்தார் சிறக்கவைக்கும் இறைவன் தன்னை
இளையாத்தங் குடிநகரில் வணங்கு வாமே!

ஞானகுரு மூர்த்திகளால் அழைக்கப் பட்டார்
நாடியிங்கே இளைப்பாறிப் புரக்கப் பட்டார்
ஆனபிரிவில் ஒன்பானாய் வாழ வந்தார்
அன்றுமுதல் எந்நாளும் சால்ப மைந்தார்
வானநிலாக் கீற்றைத்தன் சடையணிந்தார்
வைகை நதிச் சுந்தரனே இறையாய்க் கண்டார்
தானடைந்து தாளடைந்து வாழும் கோயில்
தகவுநிறை இளையாத்தங் குடியே யாமே!

திசையெல்லாம் தோளாக்கி மாகாளத்துள்
தீக்குண்டம் உரிமைகொண்ட புலையராகி
வசையொழித்துப் பெருமைகொள்ளும் வள்ள்ல் ஆனார்
வார்குழலாள் கல்யாணி உடனாய் வாழ்வார்
இசையுடையார் யாழ்ப்பாணர் பண்ண மைக்க
ஈசனாரின் புகழ்பாடும் சம்பந் தர்க்கு
பசையுடைய பாலளித்த அம்மை அப்பர்
பரவும்ஊர் இளையாத்தங் குடியாம் தானே!

வளையாத அறம்மாறி கண்ணகிக்கு
வழங்கியதோர் கொடுமைதீர் செழியன்பின்னோன்
களைத்திருந்த கண்ணகியின் மரபினோர்க்கு
கட்டிவைத்த கயிலாய நாதர் வாழும்
இளையஆதன் குடியென்ற ஊரைச் சேர்ந்தே
ஏழான பிரிவினர்கள் ஒன்பான் ஆகி
சளைக்காமல் பக்திசெய்து அடைந்த பேறு
சண்டீசர் தன்னீசர் தாள்கள் அன்றோ!

ஒக்கூரார் தலைதந்தே அறத்தைக் காத்தார்
உயர்பட்டினச் சாமி உயர்வைச் சேர்த்தார்
தக்கபெரு மருதூரார் தர்மம் செய்தார்
தனிக்கழனி வாசலூரார் பெருமாள் கண்டார்
அக்கறையாய்ச் சுந்தரத்துப் பிள்ளை தன்னை
ஆலயத்தில் கிண்கிணிக்கூர் அன்பர் ஏற்றார்
புக்கபேர செந்தூரார் சிறுசேத் தூரர்
பொன்போல்வார் இளையாற்றக் குடியார் தானே!

மந்திரமாய் மண்வாக்காய் திருமறைக்குள்
வரப்பெற்ற பெருநிதியாய் தமிழால் போற்றி
சந்தமும் துதிசெய்யப் பெற்றான் தன்னை
சங்கரர்க்குப் பூரணத்தைத் தந்த தேவை
இந்திரற்கோ வெண்யானை, சக்கரத்தை
ஏந்துகிற திருமாற்கே ஈந்தான் தன்னைச்
செந்திருவைக் கல்யாணி உடனாய் ஆன்
சிவன்தன்னை இளையாத்தங்குடியில் காண்பீர்!

கிழவியவள் பிட்டிற்கே உழைப்பைத் தந்தான்
கீர்த்திமிகும் அகத்தியர்க்கே அழைப்பைத் தந்தான்
பழமைமிகு தமிழேடும் ஆற்றை திர்த்துப்
பரிசில்பெற ஏடகத்தில் நிலைப்பைத் தந்தான்
முழவதிர யாழிசைக்கத் தில்லை மூதூர்
முப்போதும் விழாக்காணும் முழக்கைத் தந்தான்
குழகன்றன் அடியார்க்கே சிறப்பைத் தந்தான்
குலத்திலுயர் இளையாத்தங் குடியான் தானே!

பிளிறுகின்ற யானைக்கும் சிலந்திக்கும் போர்
புண்ணியனால் உருவான ஆனைக்காவில்
களிறுபுகாக் கற்கோயில் கட்டுவித்த
கனிவாய கோச்செங்கட் சோழ மன்னன்
மிளிருகின்ற பொன்வேய்ந்த தில்லைக் கோவில்
மேவுகின்ற சிவனடியைத் தந்து காத்தார்
தளர்கின்ற போதெல்லாம் துணையாய் நின்றே
தாங்கிடுவார் இளையாத்தங்குடியார் தானே!

இருபத்தும் ஏழான விண்மீன் தம்மால்
இருநான்கும் ஒன்றும்சேர் கோள்கள் தம்மால்
ஒருபத்தும் இரண்டான ராசி யாலும்
உண்டாகும் கேடுகளை நீக்க வேண்டின்
உருப்பெற்ற நன்மைகளும் பெருக வேண்டின்
உயர்வான நித்தியகல்யாணி அம்மை
திருப்பெற்ற கயிலாய நாதர் வாழும்
திருத்தலமாம் இளையாத்தங் குடியைச் சாரீர்!

செய்விப்பான் நீயென்று தெரிந்த தாலே
செகத்தினிலே பிறரொன்றைப் பணிவோம் அல்லோம்
மெய்விப்பான் சிவனென்றே அறிந்த பின்னே
பொய்யுதறிப் பிறப்புதறக் காத்தே உள்ளோம்
உய்விப்பான் கயிலாயன் உணர்ந்த ஞான்றே
உம்பதமே தொன்றுதொட்டு வணங்கு கின்றோம்
சைவத்தாய்! சிதம்பரத்தின் பதிகம் சொன்னோம்
தாங்கிடுவாய் இளையாத்தங் குடியின் வாழ்வே!

* * * * *

# மாத்தூர்

## பெரியநாயகி அம்மன் உடனாய

## ஐந்நூற்றீசுவரர் பதிகம்

காற்றாராய்க் கனிந்தாராய்க் கண்நெற்றி கண்டாராய்
நீற்றாராய் நெருப்பாராய் நெல்வேலி போட்டாராய்
ஏற்றாராய் வெண்திங்கள் சடைமுடியில் ஏற்றாராய்
மாற்றூரார் ஐந்நூற்றார் மாற்றுப்பொன் ஏற்றாரே!

நெடுமாட மதில்சூழும் நிலாப்பிறைபோல் முற்றத்தார்
கொடியாடு கம்பங்கள் கொலுவேற்றும் சுற்றத்தார்
பொடியாடு நெற்றியுடைப் புனிதர்தான் ஆனாரே!
மடியாளும் தாயாகி மாற்றூரில் வாழ்வாரே!

சங்கினஞ்சேர் கடலதனில் தாவரங்கள் நிலத்ததினில்
எங்குமள அண்டமதில் எம்மிறைவர் ஆளுகின்றார்
கொங்கணவர் தான்வழுத்தக் குலமுழுதும் சேர்ந்திறைஞ்சக்
கங்கையணி ஐந்நூற்றார் தங்கருணை பொங்கினரே!

ஆண்பனையும் காய்காய்க்க ஆறெதிர்த்தே ஏடேற
சாம்பவிக்குச் சரிபாதி தான்தந்த பேரிறைவர்
பூம்பாவை சங்கிலியார் பொருந்திவரச் சுந்தரர்க்கும்
மாண்பளித்தே அருள்கொடுக்க மாற்றூரில் சேர்ந்தாரே!

சிங்கமேறு அம்மையினைச் செம்பெரிய நாயகியை
அங்கமதில் கொண்டாரே! ஆலவாயில் நின்றாரே!
இலிங்கவடி வாகியிவண் இன்கருணை பொங்கிவர
சங்கமுதல் இன்றுவரை தமிழிறைவர் சிவனாரே!

ஓட்டைப்பொன் ஆக்குகையில் உயர்செம்பும் ஆகாதோ?
காட்டுத் தூள் சூடியதன் கால்தூக்கி ஆடியவர்
பேற்றை உதவஒரு பிரம்படியும் பட்டவரே
மாற்றூரில் எழுந்தருளி மனங்கொண்டு வந்தாரே!

அடைத்திடவும் திறந்திடவும் ஆரமுதப் பாட்டருந்தி
விடைக்களிற்றை யேறியவர் வெண்ணீறும் பூசியங்கே
இடைத் தளிரைப் பெருந்தேவி இடத்தமர்ந்த எம்மானே
படைத்தவனே மாற்றூரில் பனித்தலையில் கொண்டாரே!

என்அப்பன் பாட்டனென எத்தனையோ தலைமுறைகள்
என் அப்பன் இவனெனவும் என்அம்மை உடன்வரவும்
முன்னொப்பிக் குடிவிளங்க முன்னெழுந்த பெம்மானே
மன்னொப்ப வழிவழிகள் வரந்தருவான் மாத்தூரே!

இருவினையும் ஏகவொரு இதம்புரியும் பெருமானே
கருவினிலே மூச்சாகிக் கடைவரைக்கும் அருள்வானே!
குருசெவ்வாய் புதன்வெள்ளி சனிபாம்பு கதிர்மதிகள்
திருவினையே தருமாறு திகழ்பவனே மாத்தூரே!

நால்வர் தமிழ்பாடும் நாவிருந்து தமிழ்மாந்தி
மேல்வருமா மழைபோல வியன்ஞாலம் விளைபெருக
சால்புநிறை நெஞ்சமுடன் சங்கரவே போற்றியென
மேல்முறைகள் நான்மறைகள் வேதமொலி மாத்தூரே!

பெரியதொரு நாயகியைப் பேணுகிற பெம்மானை
அரியதொரு வாழ்வமைத்த ஐந்நூற் றீசுவரனை
உரியவனை மாத்தூரில் உறைபவனை சிதம்பரத்தின்
பெரியவனைப் பேசுபவர் பெறுவதெலாம் நற்பேறே!

* * * *

# வயிரவன் கோவில்

## வடிவுடை அம்மன் உடனாய

## வளரொளிநாதர் வயிரவர் பதிகம்

(நட்டராகம்)

நெற்றிக் கண்ணினர் நீற்றைப் பூசினர்
நிலவணி செஞ்சடையர்
கற்றைக் குழலிலே கங்கையைச் சூடினர்
கொன்றைகள் பாம்பணிந்து
சுற்றம் நந்தியர் மற்றைய கணங்களும்
பெற்றவர் பெருமையுள்ளார்
வற்றாச் செல்வரே வைரவன் கோயிலின்
வளரொளி நாதராமே!

இந்திரன் வந்தனன் தன்தலை சூடினன்
சரணனென வந்ததாலே
தந்திரத் தெவ்வரை சம்பகா சூரனை
வயிரவர் கோலமிட்டு
வெந்திறற் சூலமும் கண்டிகை சரப்பளி
மழுவுடன் உடுக்கையேந்தி
கொந்திய கோலமே நின்றிடும் கோயிலே
வளரொளி நாதராமே!




செய்யெலாம் சூழவும் மண்டபம் கட்டவும்
செய்தவர் செய்யமுன்னோர்
தெய்யனாம் செட்டியும் சொக்கராம் செட்டியும்
சிலையென நின்றிருப்பர்
மையுலாம் கண்ணினாள் வடிவுடை நாயகி
மெய்யுடன் ஆளுகின்ற
வையமே புரப்பராம் வைரவர் சிறப்பராம்
வளரொளி நாதராமே!

அழிஞ்சில் மரத்தடி அமர்ந்த வண்ணமே
அடிமுடி காட்டானாய்
வழிஞ்சி வன்னிநாண் கோங்கு கோவை
வளர்வனக் காட்டானாய்
கொழிஞ்சித் தளிரென வடிவுடை அம்மையின்
மான்விழி நாட்டானாய்
தொழுஞ்சி வனடியார் துன்ப மழிப்பவர்
வளரொளி நாட்டாரே!

தேவர்கள் தொழும்பதி தேடிய பெரும்பழி
சாபமும் தீர்த்தழித்துப்
பாவமும் போக்கும் புண்ணியம் பெருக்கிடும்
வைரவ தீர்த்தமுண்டு

காவலாய் நிற்கின்ற வைரவர் நறுநதுணைக்
கருணையை விளக்குகின்ற
கோவிலை நாடுமே! தீவினை தீருமே
வளரொளி நாதராமே!

படைத்தவர் காப்பவர் பரம்பொருள் சேர்ப்பவர்
பரமராம் மூவராகி
கொடுத்தவர் கோவணம் உடையவர் தீக்கழல்
கைகளில் ஏந்தியாடிப்
புடைத்தொரு கண்ணினைப் பூணடவர் நெற்றியில்
புகலென வருவார்க்கே
அடைக்கலம் கொடுத்துடன் அலலைலத் தீர்ப்பவர்
வளரொளி நாதராமே!

சோழரின் தேசமும் ஆழியின் ஓரமும்
சோதனை தந்ததாலே
ஏழகப் பெருந்தெரு வயிரவன் கோயிலை
ஏற்றவர் நகரத்தார்
வாழ்விலே பல்கியே மரபெலாம் பெருகவே
வாரியே தந்தவர்காண்
ஆழ்கடல் நஞ்சினை அமுதமாய் ஆக்கிய
வளரொளி நாதராமே!

நெருப்பனல் தீண்டா நள்ளாற்றுப பதிகம்
நித்தலும் பாடுவார்கள்
கருப்பெழில் வடிவாள் நாயகிக்கார்குழல்
கழழினைச் சேருவார்கள்
பொருப்பிலே அகத்தியன் போற்றிய தேவனை
நெஞ்சிலே பூசுவார்கள்
விருப்புகள் நிறைவுசெய் வைரவன் கோவிலில்
வளரொளி நாதராமே!

தந்தையர் இடுப்பிலே சம்பந்தரிருந்து
திருநனி பள்ளி சொன்ன
செந்தமிழ் விருப்பிலே அப்பரைச் சூலைநோய்
தாக்கிடச் செய்து மீட்ட
சுந்தரர் தோழனை வாசகர் நேசனை
வடிவுடை அம்மை யோடு
வந்திடும் நற்றவர் வைரவன் கோயிலின்
வளரொளி நாத ராமே!

சிவனடி ஒன்றியே அருள்நிலை கொண்டவர்
சண்டிகேசுவரர்
தவநிலைக் கற்றளி தானிருந் தருள்தரும்
வயிரவன் கோயிலாமே!
புவனமும் ஆக்கினன் பிட்டினுக் குழைத்தவன்
பொடியது சூடினர்காண்
அவனியிற் சிறந்ததாம் வயிரவன் கோயிலில்
வளரொளி நாதராமே!

வடுகனை நாதனை அக்கினி தேவனை
வைரவ மூர்த்திதன்னை
படிகமாமணியினை பண்ணிசை விருப்பனை
வன்னியில் வாழுவோனை
வடிவுடை அம்மையை வாழ்த்திய பாடல்கள்
சிதம்பரப் பாடலில்
வல்லார்கள் முடியினைச் சூடிய மன்னரரய்ச்
செய்குவர் வளரொளி நாதராமே!

* * * *

# நேமங்கோயில்

## சௌந்தரநாயகி உடனாய

## செயங்கொண்ட சோழீசர் பதிகம்

(குறிஞ்சி)

வாலிழை பாகன் வளர்ஒளி தேகன் புலிப்போத்தின்
தோலினை யுடுத்துத் தூய்வெள் ளேறும் பெம்மானே.
நால்வகை வேதம் ஓம்எனும் நாதம் உலகாளச்
சேல்விழி ஆளும் சௌந்தர அம்மன் செயங்கொண்டான்!

ஆட்கொண்டானை அன்புடையானை அரவாடும்
தோட்கொண்டானைச் சொலஅரியானைத் தொடர்அடியார்
மீட்கொண்டானை விடைகொண்டானைச் சோழீசர்
தாட்கொண்டானைத் தாங்கிடுவானே செயங்கொண்டான்!

காமனை எரித்த கண்ணுத லானைக் கைமழுவேந்தி
ஏமனைஉதைத்தே எண்ணிரண்டாண்டாய் இளமைகொடுத்து
மாமணி மாடக் கோயில் விளங்கி மல்கிவளர்
நேமம் அமர்ந்தான் நீறு புனைந்தான் செயங்கொண்டான்!

சடையை விரித்துச் சூலமும் ஏந்தி நடமாடிப்
படையை எதிர்த்துப் பத்மாசூரன் தலைமீது
விடையை முறித்து விதியை அளித்த சோழீசர்
படையாய்ச் சிரித்துத் திரிபுரம் எரித்துச் செயங்கொண்டான்!

குருமுனி சித்தன் மதுநதிதேடி வணங்கியதும்
திருமகன் பிள்ளை இறையிடம் ஈதாய் இணங்கியதும்
ஒருபெரும் ஈசன் உமையவள் உடனாய் விளங்குவதும்
பெருமையில் மிஞ்சும் நேமமே வாழும் செயங்கொண்டான்

கல்லினில் பூட்டிக் கடலினில் தூக்கி எறிந்தாலும்
தொல்லையைப் போக்கத் துணையாய் வந்த தோடுடையன்
எல்லையில் சென்றே இறைஞ்சுவார் துன்பம் வினையாவும்
இல்லாததாக்கும் ஏறேர் ஏறு செயங்கொண்டான்!

அயன் கண்டறியா மால்கண்டறியா அடிமுடிகள்
நயங் கண்டறிவார் பாடுவார் அய்யா முத்தப்பர்
மயன் கண்டபோலே மாளிகை கண்டார் விலாசத்தில்
செயங்கொண்டார் மேல் சதகம் பாடிச் செயங்கொண்டார்

ராமனின் நாதன் காமனை எரித்த கண்ணுடையான்
மாமனன் சூலை மழலையின் தமிழால் தீர்த்தவனே
சாமளை தோளில் தம்முடல் பாதி கொண்டவனே
நேமமாம் ஊரில் சோழீசனாகச் செயங்கொண்டான்!

நேமம் பீடம் நேர்ந்த காளி பக்கலிலே
சேமம் ஈயும் வைரவர் மேற்குத் திக்கினிலே
ஓம்ஓம் என்றே உணர்வார் தாயின் ஒக்கலிலே
மாமதில் மாடக் கோயிலில் வாழும் செயங்கொண்டான்!

பொய்யதும் மெய்யும் புரண்டு திரண்ட உலகத்தில்
மெய்யினைக் காட்டி மெய்யினைக்காக்கும் மேலவனே
தையல் சௌந்தர நாயகித் தாயுடன் சோழீசர்
செய்யபொற் பாதம் சேர்வார் சேர்வர் சீர்மைகளே!

ஆலமார் மிடற்றான் காலனை உதைத்தான் அம்பலத்தான்
சாலமே தீர்த்தான் நாளுமே காப்பான் சோழீசன்
கோலமே காட்டி ஆலமாங்காட்டில் தாய்க்கீந்தான்
மேலவன் சிதம்பரம் பாடலில் காண்பார் வெல்வாரே!

* * * * * *

# இலுப்பைக்குடி

## சௌந்தரநாயகி உடனாய

## தான்தோன்றீசுவரர் பதிகம்

தான்தோன்றி வந்தானைச் சௌந்தரத்தாய் கொண்டானை
மான்புலித்தோல் உடையானை மதகளிற்றைப் படைத்தானைக்
கோன்பாண்டி நாட்டானைக் குலஇலுப்பைக் குடியானை
நான்பாட வாய்த்ததனால் நற்கதியைப் பெற்றேனே!

புகழ்த்துணை நாயனார்க்குப் பொற்காசு தினமளித்துத்
திகழ்கின்ற எம்பிரானே திருநீறு தானணிந்து
வகையறியா இந்திரர்க்காய் வயிரவராம் மூர்த்தியாகி
புகலிடம் கொடுத்தவனே புகழ்இலுப்பைக் குடியானே!

அடிமுடிகள் தேடியவர் அரிபிரமன் காணாமல்
பொடிபுனையும் அடியவர்க்காய்ப் பொக்கென்று வருவானே
வடிவுடையார் ஒருபாகம் வடிவான பெம்மானே
எடுமுடியில் நதியணிந்த இலுப்பைக்குடியானே!

கும்பாண்ட அசுரனுக்கு தேவர் குழாம் தாம்பயந்து
நம்பியே சரணென்று திரிசூல நடனமிட்டு
வம்பர்களை அழித்தவனே! வளர் இலுப்பைக்குடியானே!
பண்பாடு நகரத்தார் தான்தோன்றி ஈசுவரனே!

ஈயாயும் எறும்பாயும் வழிபட்டார் ஈசனவன்
நாயாரும் துணைநிற்க வயிரவ நாதனாகி
தாயான சௌந்தரத்தாய் தன்னுடனே எளிவந்த
சாயா வனத்தீசன் தான்தோன்றி ஈசுவரனே

மருத நிலமிருந்து பாலைநிலம் குடிபுகுந்து
மருத வளமெல்லாம் பாலையிலே தான்தேக்கி
பெரிதுகந்த பெம்மானே! பிறையணிந்து பாம்பாடும்
எருதேறி வருவானும் இலுப்பைக்குடியானே!

நாளெல்லாம் நன்னாளே நவக்கிரக மென்கின்ற
கோளெல்லாம் நற்கோளே கொள்வதெல்லாம் நல்ஊழே!
தாளென்றும் தாங்குகின்ற தன்னடியார் வினைதீர்க்கும்
ஆளென்று தான்தோன்றி அமர்இலுப்பைக் குடியானே!

ஐநூற்று மாற்றுப்பொன் அவாவிட்ட கொங்கணவர்
பொய்மாற்றுத் தனையுணர்த்திப் பொன்னடிக்கே உய்வித்த
தையல் சௌந்தரத்தாய் தான்தோன்றி ஈசுவரனார்
ஐயுன்தனை நாடின் அகம்புறமும் நலமாமே!

எல்லை மீறாமல் எந்நாளும் சிவனடியே
தொல்லை நீக்குகின்ற துணையெனவே கொண்டவர்கள்
மல்லைச்சிற்பவழி மணிக்கோயில் கண்டவர்கள்
நல்லை நகரத்தார் நவத்திலொன்று இலுப்பையிலே!

நஞ்சுண்ட கண்டனவன் நதிதலையில் கொண்டவனாம்
மஞ்சுண்ட கைலைமலை மதிசூடி நிற்பவனாம்
நஞ்சுண்டு வினையுழன்று நாடியே தொழுவார்க்கு
அஞ்சுண்ட எழுத்துண்டாய் அமர் இலுப்பைக்குடியானே!

பாம்பணிந்த பெருமானைப் பரவுகிற சிதம்பரத்தான்
தாம்புனைந்த பாடல்களால் தாள்நினைந்து பாடிடுவார்
கோன்போல அரசாள்வார் குலமுழுதும் தழைத்துவரும்
போம்பழிகள் தீவினைகள்; புண்ணியமே மல்கிடுமே!

* * * *

# சூரக்குடி

## ஆவுடைநாயகி உடனாய

## தேசிகநாதர் பதிகம்

(இந்தளம்)

ஞான முத்திரை தானு ரைத்திடு நாயகன்
மானு டுத்திடு தோலி னைத்தன தாக்கினன்
கான கத்திடை ஆவு டைத்துணை வாழ்பவன்
தேன கத்தினன் சூரை யங்குடித் தேசிகன்

சோலை கட்கிடை தம்பு றாத்திரி தும்பிகள்
ஆலை யிற்படு கன்ன லாக்கிய தேனினன்
சால வேதிரு ஞான மேற்றிடத் தென்திசை
ஆல மர்த்தினன் கால னைக்கெடு சூரையன்

ஆவு டைத்திரு நாய கிக்கிசை வானவன்
கோவு டைத்துணி தாம ரைக்கணி கோனவன்
நாவு டைத்தமிழ் பாடி டச்சுவை நாடகன்
தேவு டைத்தவர் தேடி டும்தவத் தேசிகன்

நான்முகத்தினன் மால்ர தத்தினை ஓட்டிட
நான்ம றைப்புர விக்கெ னத்தனை மாற்றிட
வான்நி லாக்கதிர் தாம்உ ருள்கிற வட்டமாய்
ஊன்அ ரக்கரைத் தீயெ ரித்திடும் தேசிகன்!

திரிபு ரத்தினைத் தீஎ ரித்திடும் செய்கையன்
அருள் நினைத்திடும் பக்த ருக்கெனில் பொய்கையன்
பெருமு கப்பொடு கோபு ரம்திகழ் தேசிகன்
கருவி ருந்திடும் போதி லும்உயிர் காப்பவன்!

(வேறு)

வேரைப்பிடித்து விலங்கும் அசைத்து விளையாடச்
சாரைப்பிடித்து நாகம் அணைத்தே உறவாட
காரைக்குடித்து மேகம் இடித்து மழைபாயும்
சூரைக் குடியை நாடித் துதிப்பின் வினையோடும்

மங்கைக்கரசி மதுரைச் செல்வி திருநீற்றைத்
தங்கண் ணாளன் தன்நோய் தீர்க்க மேலணிய
அங்கக் குழவி அருளும் தமிழைத் தான் விழையும்
எங்கட் சூரைக் குடிவாழ் ஈசன் தேசிகனே!

மண்ணில் வாழ்வும் மல்கிய வளமும் நல்லறமும்
புண்ணியப் பேறு பதினா றுடனே பெற்றிடவே
பெண்ணின் நல்லாள் ஆவுடை நாயகி உடனாய
நண்ணிய தேசிகர் சூரைக்குடியை நாடுகவே!

ஆதிக் கடவுள் அதிகைக் கடவுள் அகம்வாழும்
நீதிக் கடவுள் வாயிற் கதவுள் தமிழ்வேட்டு
மோதித் திறக்கும் சோதிக் கடவுள் மங்கைசெம்
பாதிக் கடவுள் சூரைக்குடியின் தேசிகனே!

எந்தக் கிரகம் எவ்வெவ் விடத்தில் இடர்செயினும்
எந்தத் திசையில் யார்யார் வந்து துயர்கொடினும்
அந்தப் பொழுதே அவற்றை அறுத்துக் காக்கின்ற
சிந்தைக் கினியான் சூரைக்குடியின் தேசிகனே!

சூரைக்குடியின் சோதித் தேவனைத் தான்பாடும்
காரைக்குடியின் முத்துபட்டணச் சிதம்பரத்தின்
சீரைப் படித்தே ஓதிப் பரவின் பேரின்பத்
தாரைச் சூடித் தமரும் ஓங்கி வாழ்வாரே!

** ** ** **

# வேலங்குடி

## காமாட்சி அம்மன் உடனாய

## கண்டீச்சுரர் பதிகம்

(திருநேரிசை)

கொன்றைப் பூச்சூடினானை குளிர்நதி தாங்கினானை
என்றுமே இளமையானை எரிசாம்பல் பூசினானை
மன்றல் மாமதுரையானை மங்கையோர் பங்கன்தன்னைச்
சென்றுநாம் வணங்கக் காண்போம் செயவே லங்குடியில்தானே!

கண்டீசர் காமவல்லி கருணையே செய்யும் தெய்வம
பண்பாடும் பாண்டி நாட்டில் பழங்குடி நகரத்தார்கள்
கொண்டாடிச் சைவம் போற்றும் குடிகளாய் நிறைந்ததாலே
வென்றீந்து காக்கின்றாரோ வேலங்குடியில் தேவே!

காதலும் மறக்க கில்லேன் காமமும் துறக்க கில்லேன்
பேதைமை போக்ககில்லேன் பேதங்கள் நீக்க கில்லேன்
நாதனே! நமசிவாயா! மாதுமை பங்கா கேள்வா
வேதனை மாற்றுவாயே! வேலங்குடியில் தேவே!

பிச்சையும் எடுத்துச்சோற்றைப் பெருமானார் சுந்தரர்க்கு
கச்சூரில் ஊட்டிக்காத்த கடவுளே! கண்டீச்சுரா!
சிற்சில புள்ளி கூடிச் செய்செய பலராய் மேவ
மெச்சிடச் செய்வாய் ஐயா! வேலங்குடியின் தேவே!

காமாட்சித் தேவியோடு கண்டீசர் சேர்ந்தெழுந்து
நாமாச்சு காக்க என்றே நல்லருள் உகந்து காக்கும்
மாமாட்சி வேலங்குடிக்கு மல்குக குருவின் பார்வை!

ஓம்ஆட்சி செய்து புள்ளி உயர்ந்திட உதவு வாயே!

இருவினைத் துயரம் போக எரிதழல் சுடரை ஏந்தி
வருவனை ஒற்றி யூரில் மணம்புரி சுந்தரர்க்காய்
தருநிழல் மாற்றிக்கொண்ட தங்கையவன் நம்பன் அன்பர்
பெருவினை தீர்த்தான் வேலங் குடிவளர் பெம்மான் தானே!

கோலினால் மொத்தும் உண்டார் குடிகளோ தழும்பைக் கண்டார்
காலனை உதைத்த ழித்துக் கண்டனுக் களித்தார் தீர்க்கம்
ஏலவார் குழலி சீதை இராமனோ டிணையச் செய்தார்
வேலனாம் குடிக்கே வந்தார் வேண்டினார் வேண்டல் பெற்றார்

காவலாய் நிற்பான் போலும் காரைக்கால் அம்மை முன்பு
ஏவலாய் நடப்பான் போலும் ஏதிலார் தலைவன் போலும்
நாவலார் பரிந்தே ஏத்தி நம்பனே என்பார் போலும்
தேவனே வேலை வாழும் செல்வமே சிவபிரானே!

வெவ்வேறு குடிகள் எல்லாம் வேலங் குடிக்குள் ஒன்றி
அவ்வேதன் தன்னை வேண்ட அருளிய தன்மை போலே
செவ்வைகள் மேலும் ஓங்கச் செய்தனர் கண்டீச் சூரர்
அவ்வயின் வணங்கிப் போவார் அடைவார்கள் செல்வப்பேறே!

பாலன் குடித்த பாழும் பைந்தமிழ்ப் பாவாய் மிஞ்ச
மாலன் கொடுத்த தங்கை மயிலெனத் தவங்கள் கொஞ்ச
ஆலம் குடித்த கண்டன் அன்னைகா மாட்சி யோடு
வேலங் குடியில் வாழ்வார் வியன்கழல் ஆழ்வார் ஆள்வார்!

திருஞானர் பதிகத் தாலே திருமாலும் சிவனாய் மாற
பெருஞானக் கச்சிக்கோயில் பேராளா! பிறையைச் சூடி
சிறியேனை ஆளாய்க் கொண்டே சிதம்பரப் பண்கள் தந்தாய்!
விரிஞானக் கண்டீச் சூரா! வேலங் குடியின் தேவே!

✲ ✲ ✲ ✲ ✲

# இரணிக்கோயில்

## சிவபுரந்தேவி உடனாய

## ஆட்கொண்டநாதர் பதிகம்

(திருவிராகம் – வியாழக்குறிச்சி)

வாட்கொண்ட கண்ணாளை வார்க்கொண்ட
மாராளை வடிவாய்க் கொண்ட
தோட்கொண்ட நல்லாரைச் சூழ்கின்ற
அழலாரை இரணி யூரில்
தாட்கொண்டு வந்தாரைத் தாங்குகின்ற
பேராரைச் சிவபு ரத்தாய்
ஆட்கொண்ட தேசிகரை அன்புகொண்டே
ஆளாவார் ஆளா வாரே!

ஆணவஞ்சேர் இரணியனை வயிற்றுதைத்தே
அரத்தத்தை உறிஞ்சி யன்று
பூண்அவத்தைப் போக்குதற்குத் திருமால்தான்
போந்துவந்து போற்றும் ஊரே
ஆண்நயந்து பெண்நயந்து ஆட்கொண்ட
தேசிகரின் அருளி யூரே
காண்நவத்தார் தொன்மைமிக்கார் கார்மிடற்றார்
கருணைமிகும் இரணி யூரே!

நரசிம்ம வடிவெடுத்து நகங்களினால்
உடல்கிழித்தே இரணி யன்றன்
சிரசிற்றே கீழ்வீழச் செய்மாலார்
தேடிவந்து சிவனை வேண்டித்
தரிசித்தே அருள்பெற்ற தவத்தினூரே
தாயான சிவ புரத்தாள்
அரசிவிழை அனலேந்தி நஞ்சுமுண்டார்
ஆட்சிசெயும் இரணி யூரே !

விடமுண்ட பிள்ளையினை விழிப்பித்து
விழைகின்ற மணமும் செய்து
நடம்கண்ட ராசனவர் நலம்பாடி
திருமருகல் நத்தி ஒதும்
திடமுண்ட சம்பந்தர் தேன்தமிழால்
திளைக்கின்ற தேசி கர்க்காய்
இடமுண்டே நெஞ்சித்தில் இதமுண்டே
இனிப்புண்டே இரணி யூரே !

ஒருநாக நாட்டிருந்தும் புகார்விடுத்தும்
உருவான செட்டி நாட்டில்
திருநாகைக் காரோணம் பொன்பெற்றுக்
சுந்தரர்போல் நகரத் தார்கள்
பெருவாரி அறமியற்றச் சிவன்பணிந்து
பெருகியதோர் அருளி னாலே
உருவான இரணியூரில் சிவபுரத்தாய்
உடனானார் ஆட்கொண் டாரே !

நினைப்பதுவும் துதிப்பதுவும் நெகிழ்வதுவும்
நெஞ்சத்துக் கூட்டின் உள்ளே
கனைப்பதுவும் இளகுவதும் காதலாகிக்
கசிவதும் செய்வான் கண்டீர் !
பனிப்பொருப்பில் நள்ளாற்றில் பழஞ்சுரத்தில்
பழனவயல் இரணி யூரில்
மணப்பளிங்கில் விளங்குகின்ற சிவபுரத்தார்
மகிழ்கின்றார் ஆட்கொண் டாரே !

விழிமலரால் அருச்சுனைகள் திருவீழி
மிழலையினில் திருமால் செய்ய
அழலான அக்கினியும் சூரியரும்
சந்திரனும் தீர்த்த மாட
வழிவழியாய்ச் சைவநெறி மெய்கண்டார்
வழிவளரும்வெண்காட் டாரே
செழிபுகழை மகப்பேற்றை சிறப்பதனை
அருளுபவர் ஆட்கொண் டாரே !

கரணமதில் நடக்கின்ற கால்களோடு
கடலலையில் துரும்பாய் ஆகித்
தருணமது புரியாமல் தவித்துப்போய்
சந்ததமும் வினையு ழன்று
சரணமெனச் சிவனடியே உணர்ந்து போற்றி
சார்ந்துள்ள இரணி யூரில்
கருணைசெயச் சிவபுரத்தாய் உடனாகி
கதித்தவரே ஆட்கொண் டாரே !

பொன்னிறத்துக் கயிலையிலே பொலிவெள்ளைப்
பூப்பனியின் தண்மை கொண்டான்
செந்நிறத்துக் கனலேந்திக் சிதைகாட்டில்
தீக்கதிரின் செம்மை கொண்டான்
மைந்நிறத்தாள் சிவபுரத்தாள் மாதொருத்தி
பாகத்தில் கருமை கொண்டான்
எந்நிறத்தான் எம்மேனி எனஉரைக்க
யாருளரோ? ஆட்கொண் டாரே !

நெருப்பாகித் திருஅண்ணா மலையானை
நீராய்ஆ னைக்கா வானாய்
விருப்புள்ள காற்றாகி காளத்தி
வேடனாரின் திருத்த லத்தில்
மருப்புற்றே உமைதழுவக் குழைந்த கச்சி
மணல்லிங்க ஏகன் தன்னை
திருப்பெற்ற வான்வெளியாய்த் தில்லைதன்னில்
திகழ்பவரே ஆட்கொண் டாரே !

எண்திசையில் பூமியுள அண்டமதில்
இரவுபகல் எக்கா லத்தும்
கண்மூன்று கொண்டவரே கதிஎன்று
கழல்பணிந்து போற்றுகின்ற
பண் நிறைந்த பாவிளங்கும் சிதம்பரத்தின்
பதிகத்தால் பரவு வார்க்கு
மண்பதையில் நவகோள்கள் மகிழ்வுகொண்டு
நன்மைதர முந்து மாமே !

# பிள்ளையார்பட்டி

## சிவகாமியம்மன் திருவீசர்

### வாடாமலர்மங்கை உடனாய மருதீசர் பதிகம்

(குறிஞ்சி)



கானார் புணர்கங்கை கரிய முடிதாங்கி
தேனார் மலர்கொன்றை திங்கள் தனைசூடி
மானார் விழியன்னை வாடா மலர்மங்கை
கோனார் மருதீசர் குடையே நிழலாமே

வேதம் பயில்வாரை வெண்ணீ றணிந்தாரே
நாதம் இசைப்பாரை நாடிக் கொடுப்பாரே
பாதம் தனைக்காட்டிப் பாங்காய்ச் செய்வாரே
மாது மலர்வாடா மருதீச்சுர னாரே!

பண்டைப் பழங்கோயில் பாண்டித் தலக்கோயில்
அண்டைப் பெருநாட்டில் யானை வளர்கோயில்
கொண்டல் மயிலாடக் கொள்கை மறையோர்கள்
மண்டார் மலர்வாடா மருதர் கோயில்லே!

தழுவக் குழைந்தாரே தமிழ்நாத் தழைத்தாரே
வழுதிக் குடியாரே வன்னி மரத்தாரே
உழுதார் வயலூடே ஓங்கித் திகழ்வாரே
தொழுதார் துயர்தீக்கும் மருதீச் சுரனாரே!

குன்றில் முருகோடு கோட்டுக் களிறோடு
அன்றில் புறவென்ன அன்னை அருளோடு
முன்பின் வினைதீர்த்தே முக்திப் பதமீய
நின்றார் மருதீசர் நெஞ்சக் கோயில்லே!

மாதில் அரையானார் மாலில் அரையானார்
சோதிப் பிழம்பானார் சுடலை உடலானார்
வேதப் பொருளானார் வெள்ளை விடையாரே
தீது கழித்தாரே திருவீச ரானாரே!

குன்றம் இடைநின்று குளிர்பூம் புனல்தொட்டு
மன்றம் மதில்விண்தோய் மாடப் பெருங்கோயில்
நன்றே புரிவார்கள் நாடித் தொழுகின்ற
தென்றல் சிவகாமி திருவீச் சுரமாமே!

அல்லல் துயர்துன்பம் அல்லா தழிக்கின்ற
செல்லச் சிவகாமி திருவாள் தான்விழையும்
கல்லைக் குடைந்தாக்கும் கரையார் திருவீசர்
எல்லை மகிழ்வாரே எக்காட் டூராரே!

கோயில் குடந்தோற்றம் குணமாம் திசைநோக்கி
சேயில் பெரியாரைச் சேர்ந்தே உடனாக்கி
தாயிற் புரக்கின்ற தன்மைச் சிவனாரே
தீயில் சுடரான திருவீச ரானாரே!

கிள்ளை மொழிப்பெண்டிர் கேடில் பெரும்பத்தர்
வெள்ள மெனச்சேர்ந்து வேண்டி நிற்கின்றார்
பிள்ளை யார்பட்டிப் பெம்மான் அருள்வாரே
வள்ளல் மலர்வாடா மங்கை கண்ணாரே!

நல்லார் நலம்மேவ நயப்பார் குலம்வாழ
அல்லார் கொடுந்தீயர் அல்லல் தாம்தீர
தொல்லார் இறைவர்பால் துணையாய்ச் சிதம்பரத்தின்
சொல்லே சொல்வார்க்குத் தொல்லை அகன்றிடுமே!

திருச்சிற்றம்பலம்

* * * *

*வானார்ந்த வளமனையில் பிறந்த தம்பி*
*வயிறார அன்னமிட்டு மகிழ்ந்த பெற்றோர்*
*ஊனார்ந்த திருவயிற்றில் பூத்த முல்லை;*
*உயிரார்ந்த செந்தமிழை மிழற்றும் கிள்ளை*
*தேனார்ந்த செந்மிழால் சிவனாம் ஞானச்*
*செம்பொருளைத் தேவாரப் பதிகம் போல*
*நாணாளும் இறைவணங்கும் பாட லாக*
*நமக்களித்தான் சிதம்பரமாம் நம்பி வாழ்க!*

*அவற்பெற்ற நகரத்தார் இனத்தார் எல்லாம்*
*"ஆண்டவனால் வரத்தாலே பெற்றோம்" என்றும்*
*"தவப்பயனால் தமிழ்பாடப் பெற்றான்" என்றும்*
*தலைநிமிர்ந்தும் மனமகிழ்ந்தும் சாற்றும் வண்ணம்*
*சிவபெருமான் தந்தவனே! சிதம்ப ரத்தின்*
*திருப்பெயரின் உட்பொருளே! ஞானக் கன்றே!*
*நவமணியாய்த் திருக்கோயில் பதிகம் தந்தாய்*
*நமதுபழம் திருமுறையாய் பதிகம் வாழ்க!*

- மகாகவி அரசி

நகரத்தார் சமூகம் பற்றியும் அவர்தம் அடிப்படை அடையாளமாகத் திகழும் ஒன்பது நகரக்கோவில்கள் பற்றியும், குறிப்பிடத்தக்க சிறப்புகளையெல்லாம் குறிப்பிடும் நூல் இது. பொதுவாகச் சிவபெருமானின் பெருமைகளைத் தொகுத்துச் சொல்லி, அவனைத் தொழுவதனால் பெறும் பயன்களை வகுத்துச சொல்லும் ஒரு வழிபாட்டு நூலாகவும் இது இயங்குகிறது.



- முனைவர் கரு. முத்தையா

கவிஞர் சித. சிதம்பரம்